# திருக்குற்றாலம்
## சித்திரசபாபதி மாலை

### காப்பு

சீர்மருவுங் கஞ்சத் திருமால்முத் தேவரெனப்
பார்மருவுஞ் சித்ரசபா பதிமாலை பாடுதற்கே
போர்மருவும் பாரதமுன் பொன்மே ருவில்வரையும்
கார்மருவும் மும்மதத்துக் கற்பகமே காப்பாமே

### நூல்

பூவார் செழுங்கமலப் பொன்னடிதந் தென்னை முற்றும்
காவா திருக்கை கடனன்று கண்டாயே
மூவா முதல்வா முதல்ஈறி லாதவனே
தேவாதி தேவர்தொழும் சித்திரச பாபதியே 1

அன்பா லுருகி அருட்பால் அமுதருந்தி
உன்பால் மருவா துறுபா தகமலவோ
என்பால் மிடைந்தமுடை யாக்கையெடுத் தேசடைந்தேன்
தென்பால் வடவிருட்சச் சித்திரச பாபதியே 2

பித்தனே உன்மீதிற் பேராசை கொண்டுமதோன்
மத்தரே போலுமதி மாண்டதுவும் மாதவர்காண்
எத்தனே யென்னைமுன்வைத் தென்மறைப்பி லாட்டுகந்த
சித்தனே தேசிகனே சித்திரச பாபதியே 3

பேரா தவியைப் பிறப்பிறப்பி லேயமுந்தி
ஓராத வேதமுதல் ஓதி யுணர்ந்தாலும்
நீரா தவன்போலும் நின்னிலைத் தானாகிற்
நேரா தவர்க்கெளிதோ சித்திரச பாபதியே 4

சைவ சமயத் தலைநின் றுனையுணரா
ஐவர்க் கிடைந்தேனை ஐயாகண் பார்த்திரங்காய்
கைவச் சிரனமரர் கண்டுதொழுந் தாழ்சடிலத்
தெய்வப் பகீரதியாய் சித்திரச பாபதியே 5

அரிகூடத் தேவியுமை யான்கூடக் கொண்டாய்தா
பரிகூட என்னைப் பழுதுபடத் தள்ளாதே
விரிகூட மும்முகப்பும் மேடையும்சூழ் நன்னகரத்
திரிகூட மால்வரையாய் சித்திரச பாபதியே 6

அருவே வுருவாய் அருட்பாற் பொருட்படுத்தி
இருவே தனைக்குள் எனைச்சாட்டி ஆட்டுவித்தாய்
மருவே மலரே மலரயன்மால் காணாத
திருவே சிவகுருவே சித்திர சபாபதியே 7

நெஞ்சடையா நின்ற நினைவடையு நாளிருகண்
பஞ்சடையா முன்உன் பதமடையும் பேறுளதோ
நஞ்சடையாள களத்து நம்பா நதிபொதியும்
செஞ்சடையாய் நன்னகரச் சித்திரச பாபதியே 8

ஆடுந் திரைக்குள் அலைமாறா யாறலைந்து
வீடும் பழவினையேன் வீடும் பெறுவேனோ
நாடும் திருமாலும் நான்முகனும் ஆதியந்தம்
தேடும் பசுபதியே சித்திரச பாபதியே 9

வாசிமேற் கொண்டு மதிமண் டலம்புகுந்து
வீசி யகலாத வெறுவெளியி லேநடத்திக்
காசி அருணை கமலைதில்லை காணவைத்த
தேசிகனே நன்னகரச் சித்திரச பாபதியே 10

குத்திரமே செய்யுங் கொடுஞ்சக் கரங்கழித்து
புத்திரரும் மித்திரரும் பூவையரும் பொய்யாக
நித்திரையை மூடி நெடுங்கே வலத்திரைக்குட்
சித்திரக்கூத் தாடுகின்ற சித்திரச பாபதியே 11

கூடினாற் காணுங் குறிப்புங் குணமுமிலாய்
வீடினாற் காண்பரியாய் வீடுபெறு வாரெவர்காண்
பாடினார்க் கன்புபுரி பண்பாவின் பாதலமுந்
தேடினார்க் குந்தெரியச் சித்திரச பாபதியே 12

அட்டாங்க யோக லாலதுந்தான் மாறுங்கான்
தெட்டாந் தனுவில் சிறந்தருளி ஏகவித்தே
நட்டாந்த மாக நாடாமல் நாடிநர்க்குத்
திட்டாந்த மெய்ப்பொருளே சித்திரச பாபதியே 13

பவானந்த கோடிபிறப் பாலிறப்பாற் காலொடியும்
அவானந்த மின்னோ டழுந்துவது மெந்நாளோ
புவானந் தொடுத்து புரையடங்க லேதேக்கும்
சிவானந்த வெள்ளமே சித்திரச பாபதியே 14



பைங்கட் கரும்பீலிப் பார்வைஎனத் தீர்வைபுரிந்(து)
அங்கட் குறியா யறிவறியு நாளுளதோ
வெங்கட் செவிபதுங்க வேணிபின்னால் வெண்கிரணத்
திங்கட் கொழுந்துஒதுங்கும் சித்திரச பாபதியே 15

மாற்றமினிச் சொல்லுவதென் மாற்றும் பிறப்பிறப்பே
ஏற்றமென நீஒருவன் எக்கா லமுமிருந்தாற்
றோற்றம் ஒடுக்கம் தொழிலமையு மாறுளதே
தேற்றமென்ன மூடமென்ன சித்திரச பாபதியே 16

காண்டற் கரிய கடவுள்நீ தேசிகன்போல்
ஆண்டற் புதத்தின் அடிமுடியிற் சூட்டின் அல்லால்
வேண்டற் கரியமறை வேதனுமா லுங்கூடித்
தீண்டற் கரியானே சித்திரச பாப்பதியே 17

தானே ஒருவன் சமைந்தா டுதலைவிட்டு
நானே யெனவும் நடித்தேன்மன் கூத்தாய
கோனே எனையாண்டு கொண்டருள்வாய் இன்பவெள்ளத்
தேனேவின் னாரமுதே சித்திரச பாபதியே 18

ஆவிதனில் ஐந்தும் அடங்காம லேயடங்கிப்
பாவியேன் பாவனைபோய்ப் பாலிப்ப தெந்நாளோ
ஓவியம்போ லுன்னை உணர்வார்க் குறுதுணையே
தேவிகுழல் வாய்மொழிசேர் சித்திரச பாபதியே 19

கரையிலா வஞ்சக் கருக்குழியில் வீழ்வேற்குத்
தரையிலாய் சொல்லச் சலதிமண லுந்தகுமோ
உரையிலாய் உண்ணும் உணர்வுமிலா யொப்புமிலாய்
திரையிலா வாருதியே சித்திரச பாபதியே 20

நங்கணவர் நீயெனவும் நாடோறும் நத்திடுவார்க்(கு)
அங்கணலர் தீரவுணர் வருள்வதுநீ நானன்றோ
வெங்கண் அரவ விடையாய் விடைதழுவு
செங்கணெடு மால்விடையாய் சித்திரச பாபதியே 21

ஆண்பாலும் பெண்பாலும் அல்லா தலிப்பாலும்
ஏண்பால் அனேக விதப்பா லுருவெடுத்தேன்
காண்பானுங் காட்டுதலுங் காட்சியுமொன் றில்லாத
சேண்பால் நடித்தருளும் சித்திரச பாபதியே 22

பாவந்தருமமெனப் பண்ணு வினையினமாம்
மாவந்த காரஇருள் வல்விலங்கு மாயாதா
யாவண் குழலாகி யாண்டுநீ பார்வைதந்தால்
சீவன் சிவனாகும் சித்திரச பாபதியே 23

ஊனார் உயிரார் உடலார் உயிர்த்துணைநீ
தானார் அருளார் தவமார் பெரும்பலனார்
நானார் பிறந்துரைக்க நான்முகனார் தேடரிய
தேனார் பனிமொழிசேர் சித்திரச பாபதியே 24

என்றும் பிறப்பிறப்பும் இல்லாத தாயிருக்க
நன்றும் பழித்தீது நானும் புரிவேனேல்
ஒன்றும் தனிநின் உருபமா றுண்டோசொல்
சென்றும்பர் போற்றிசெயும் சித்திரச பாபதியே 25

ஓராமல் உண்ணா துணராம லூட்டிறம்பும்
பேராமல் இன்பப் பெருக்காய் ஒருக்காலும்
வாரா வழியாய் மறப்பும் நினைப்புமிலாய்
தீரா வழக்குடையாய் சித்திரச பாபதியே 26

போரேறே நின்னைப் புகழ்ந்தபா மாலையிற்றான்
நாரேறுந் தன்மையென நானும்ச டேறுவனோ
வாரேறு கொங்கைக் குழல்வாய் மொழி பங்காத்
தேரேறு நன்னகரச் சித்திரச பாபதியே 27

இன்றலவே யன்றுதொடுத் திற்றைவரை யென்சனனம்
ஒன்றலவே சொன்னால் உவரிமணல் ஒவ்வாதால்
மன்றல் அளைந்து வடவருவி நீர்பருகித்
தென்றல் புகுந்துலவுஞ் சித்திரச பாபதியே 28

அத்திரம்போ லும்விழி யன்னவர்க் கின்னல்புரி
குத்திரமா யக்கொடியேன் கோளகலு நாளுளதோ
முத்துரிய வாழ்வே முதற்பொருளே மொய்சுடரே
சித்திரகா யத்துரியாய் சித்திரச பாபதியே 29

என்கால் இரண்டும் எதிரேற இன்பசுகத்(து)
உன்காலின் மேற்பட் டுறங்குநாள் எந்நாளோ
வன்கா லனையுதைத்த மாவீர எக்காலுந்
தென்கால் செலும்புரிசைச் சித்திரச பாபதியே 30



கொழுஞ்செங் கனலிருங்கண் கொட்டிலே கூற்றுவன்வந்
தெழுஞ்சண் டையில்வெளிவந் தென்னைநீ ஆண்டருள்வாய்
தொழுந்தொண்டருக்கோர் துணையே துணர்மலர்ப்பூஞ்
செழுஞ்செண்ப காடவிசூழ் சித்திரச பாபதியே 31

அவமதுசெய் தாலுமுனை யல்லா தசையேன்
தவமதுசெய் தாலுமுனைச் சாருமோ சாராதோ
நவமதுவாய் நின்று நடிப்பாய் நடுவுரையாய்
சிவமது கங்கைபுணர் சித்திரச பாபதியே 32

உகைத்தார்க் கதித்தாடு மூசல்பொடி பூசலிட்டு
பகைத்தார்க் கிடமாகும் பாழ்நரகு வீழ்வேனோ
நகைத்தார்க் குடம்பெடுத்து நாணமிலா ராச்சியத்துத்
திகைத்தார்க் குறுதுணையே சித்திரச பாபதியே 33

ஆம்பலனும் பெற்றமை ஆசைநோய் பூப்பெய்திப்
போம்பலனும் பட்டோலை கொண்டெழுது புண்ணியநீ
நாம்பலகாற் சொல்வதற்கு நாமமரி தார்வசமோ
தேம்பலவு நீழல்சுற்றுஞ் சித்திரச பாபதியே 34

அற்றம் பலம்பெற் றமைவோ ரலர்புரியுங்
குற்றம் பலவும் குறியாக் குருவான
முற்றம் பலாதிமுழு மூடன்வினைக் கேடகற்றாய்
சிற்றம் பலக்கூத்தா சித்திரச பாபதியே 35

கைப்படியும் நம்பணத்தைக் கனசாரி யான்மறைத்துத்
தப்படியே மாறாட்டம் தான்செய்ய வல்லவனீ
எப்படிதா னாடுவையோ என்னவினை மூட்டுவையோ
செப்படிவித் தைக்காரா சித்திரச பாபதியே 36

சட்டகந்தா னெங்கே சதிரெங்கே தங்குபுரி
அட்டகந்தா னெங்கே அறிவெங்கே ஆசையெங்கே
நெட்டரவக் கச்சுடையாய் நீட்டுதல் ஒழிந்தாற்
சிட்டர்தொழு திட்டபுகழ்ச் சித்திரச பாபதியே 37

தலையா யடியாய் தலைதூரு மில்லாத
நிலையாய் நினையா நினைவாய நிர்மலமாய்
கலையாய் நிறைந்தொளிருங் காமாரி மாமேருச்
சிலையாய்குற் றாலநகர்ச் சித்திரச பாபதியே 38

நவ்வா னதுமறைக்க நானழிந்து போகாமல்
மவ்வா னதிலே வரவழைத்த வாசகன்நீ
அவ்வா னதிலேவந் தன்புபுரிந் தின்புதவாய்
செவ்வான மேனியனே சித்திரச பாபதியே 39

சண்டனிடு பாசந் தனைவிலக்கிப் பூசைசெய்மார்க்
கண்டனொடு மன்பர்களைக் காத்தருளுங் காரணநீ
தொண்டனிடும் பச்சிலைக்குந் தோற்றுவையோ மூன்றுலகுந்
தெண்ட னிடுஞ்சரண சித்திரச பாபதியே 40

கோவ முரசக் குணத்தன் கொலைகளவு
பாவ முறவோர் பழிப்பும் படிறுமுள
ஏவ முறையென் றருளியெனை யஞ்சலென்பாய்
தேவ முரசதிருஞ் சித்திரச பாபதியே 41

பேதச் சிலசமயப் பேயடித்து வாய்முடித்த
வாதச் சிறுக்கன் மவுனவாழ் வெய்துவனோ
நாதச் சிலம்பலம்பு நாடகத்தாய் நீடுசுகா
தீதச் சிவலோகா சித்திரச பாபதியே 42

..............................................................................

..............................................................................
வாக்கு மனமும் மறைவுறவுந் தான்கடந்து
தேக்கும் அனந்தசுகச் சித்திரச பாபதியே 43

வெம்பதஞ்சே றில்வாழ்க்கை வேண்டேன் விரிஞ்சன்முகில்
தம்பதமும் வேண்டேன் சசிகணவன் பதம்வேண்டேன்
தொம்பதமு தற்பதமுஞ் சொற்பதமும் வேண்டேனுன்
செம்பதமே வேண்டுகின்றேன் சித்திரச பாபதியே 44

வாணாள் வரைக்கும் மதித்தார் மதிவழிபோய்க்
காணாம லெங்குங் கரந்தாய் நிரந்தமாய்த்
தாணாளி லிங்குய்யத் தவம்புரிவே னுன்னையன்றிச்
சேணாடர் போற்றிசெயும் சித்திரச பாபதியே 45

வையத் தவர்வாழ்வு மாயமென வேநினைந்திங்
குய்யத் தவம்புரிவேற் குன்னையன்றி வேறுளதோ
நையத் தவறுவரல் ஞாயமோ நீயும்வன்கண்
செய்யத் தகுமோசொல் சித்திரச பாபதியே 46



பைந்தா மரையுடைய பாசடையும் பாய்புனலும்
சந்தானம் போலச் சகஜமெனக் கென்றெய்தும்
மந்தா கிலிமுடித்த வார்சடையாய் போர்விடையாய்
சிந்தா மனத்தர்தொழும் சித்திரச பாபதியே 47

நன்னிலஞ்சித் தாந்தமென நான்மறையுஞ் சொல்வதுகண்
டென்னிலஞ்சி போற்றேன் இருவினையே போற்றினேன்
மின்னிலஞ்சிற் றூர்வரைக்கு மேவிவிகா ரம்புகலுந்
தென்இலஞ்சித் தேவையருள் சித்திரச பாபதியே 48

அல்லும் பகலும் அயரா தருட்கண்வைத்தாய்
கல்லுங் கரையுங் கரையாத தென்கருத்தே
சொல்லுந் தமிழ்க்குருகித் தோகைமனத் தோகைபெறச்
செல்லுந் திருத்தூதா சித்திரச பாபதியே 49

கற்படியு நெஞ்சன் கதைப்படியே கற்பனையின்
சொற்படியே நீயுரைத்த சொற்படிநி லாமையினால்
பிற்படிமேல் இன்மை பிறப்பிறப்பி லேமடிவேன்
செற்படியுஞ் சோலைசுற்றும் சித்திரச பாபதியே 50

மருத்தும் கனலும்நெடு வானும்நெடு நீரும்நிலத்
திருத்தும் கருத்திங் கெனக்கென் றருள்வாயோ
பெருத்தும் சிறுத்த பிறையொடுபாம் பின்பகையைத்
திருத்துஞ் சடைமவுலிச் சித்திரச பாபதியே 51

என்னப்ப னேயரசே என்ஆ ருயிர்த்துணையே
அன்னத் துருவே அடியார்கட் காரமுதே
வன்னப்பிறப்பிலெனை மாட்டாதே மீட்டனையாற்
சின்னப் படுத்தாதே சித்திரச பாபதியே 52

பூகாதி ஐந்தும் புலன்களைந்தும் நாற்கரண
பேதாதி பேதமும்போய்ப் பேரின்ப மேபெருகச்
சூதான வாழ்வுபெறுந் தொண்டருக்கா ளாவேனோ
சீதா பதிபரவும் சித்திரச பாபதியே 53

ஊனாறும் பாழ்த்த உடக்கு விடகுடலை
நானா தலமுந்தான் நம்பித் திரிவேனோ
கானாறுந் தேமாங் கனியாறுங் கண்ணாறுந்
தேனாறும் பாயருவிச் சித்திரச பாபதியே 54

குருத்தாண் டவதிகொண்டு கோட்கொண்டு குத்திடுமென்
கருத்தாண் டகைநீ கலந்தாண்டு கொண்டருள்வாய்
விருத்தாண்ட கோடிகளும் மேலெடுகீ ழுந்தாண்டத்
திருத்தாண் டவம்புரியும் சித்திரச பாபதியே 55

சத்தமுத லைந்துமுப சாந்தந் தனிலடங்கச்
சுத்த சொருப துரியாத் துரியகல
மத்தர் குணமருவி வாழுநாள் எந்நாளோ
சித்தர் முனிவர்தொழுஞ் சித்திரச பாபதியே 56

கோபமே தாபமாய்க் கொண்டகுடி கேடனெனப்
பாவமே செய்துற் பவமே யகலாதேன்
சாபமே தீரத் துணைசெய்வாய் குன்றிலிட்ட
தீபமே குற்றாலச் சித்திரச பாபதியே 57

இங்காட்டுஞ் சூத்திரமே யென்றுணராக் கேள்விளலாம்
வெங்காட்டுக் கேளித்த வெண்ணிலவின் வண்ணமன்றோ
சங்காட்டுங் காதா தமிழ்நடைகாட் டுந்தூதா
செங்காட்டுங் கூத்துகத்தாய் சித்திரச பாபதியே 58

தாரான மாகத் தனித்திகிரி தானடத்திப்
பாராளு மத்தருக்கு பத்தருக்கு மேதனைகாண்
காரார் மிடற்றாய்முக் கண்ணா கறிசமைத்த
சீரா ளனையழைத்த சித்திரச பாபதியே 59

மாரவேள் தன்பாலும் வம்பால் வளர்ந்தமுலைப்
பாரவே ளைக்குறித்துப் பட்டகதை பாரதங்காண்
சாரவே தண்டமெடுத் தான்பார்த் தலத்தலறிச்
சேரவே காலூன்றும் சித்திரச பாபதியே 60

புரமா லையமாய்ப் புகுந்தலையும் என்பாலுன்
பரமாலை யாயனவும் பாமாலை சாத்துவன்யான்
உரமா லயன்முதலா யூழிகா லத்துநேத்
திரமாலை பூண்டாடுஞ் சித்திரச பாபதியே 61

பூவும் மணமும் புனலும் அமிர்தமும்போல்
யாவும் நிறைந்தவுனை யாளறிந்து சாற்றுவதோ
மேவுமதில் முற்றும் மேனாளி லுண்டுமிழ்ந்த
சேவுகைத்த சேவடியாய் சித்திரச பாபதியே 62



மத்திக்கும் சுண்ணம்பும் மஞ்சளும்போல் வஞ்சமற
முத்திக்கும் பேதமிலை மோனசுகந் தானெங்கோ
பத்திக்கும் தாதர் பரிய துரிதருக்குச்
சித்திக்கும் புத்தமுமே சித்திரச பாபதியே 63

தாவடிபோய் மீளுந் தடங்கண்ணர்க் காளாகி
பூவடிமேல் வீழ்வேன்உன் பொன்னடிக்கா ளாவேனோ
மூவடியாய் நின்றருளும் மூர்த்தியே முன்னடக்கட்
சேவடியாய் நன்னகரச் சித்திரச பாபதியே 64

கூட்டம் மறுத்திரவிற் கொம்பிழந்த மந்தியைப்போல்
வாட்டமறுத் தென்னை வந்தனையா லாரருள்வாய்
ஓட்ட மறுத்துமலம் ஊடறுத்திட் டின்னமென்னைத்
தேட்ட மறுத்தகுருச் சித்திரச பாபதியே 65

புத்தியினுற் பத்தியும்போய்ப் புத்தமுத வெள்ளத்தே
தத்தி யிருவினையுந் தள்ளினை உள்ளாக்கி
நித்தியவா னந்த நிராமயமாய் நிற்பதன்றோ
தித்தியென நிர்த்தமிடுஞ் சித்திரச பாபதியே 66

மையிலகு கண்ணார் மருட்டிற் றிரிவேனை
மெய்யில் அணைந்துருகி விண்டால் ஒருவார்த்தை
கையிலது நெல்லிக் கனியாயிற் றனிமோடி
செய்யில் விடுவேனோ சித்திரச பாபதியே 67

நன்மையனே கஞ்செயினும் நாறுமிந்தப் பொய்யுடல்விட்டு
என்மயனே யுன்னைநினைந் தீடேறு மாறுளதோ
பொன்மயனே ஞானபரி பூரணனே வாக்கிறந்த
சின்மயனே குற்றாலச் சித்திரச பாபதியே 68

ஆவணமே கொண்டுதடுத் தாட்கொண்டாய் ஆரூரன்
நாவணமே லுன்னைவைத்து நானடிமை யாவதெந்நாள்
கோவணமே மாசுணமாய்க் கொண்டோனே கொல்லனுலைத்
தீவணமாங் குற்றாலச் சித்திரச பாபதியே 69

நனவு கனவு நடுச்சுழுத்தி நாபியந்தம்
என்வு மவத்தையுமிட் டென்னையுங்கூத் தாட்டுவித்தாய்
வினவி லுனக்கோ விளையாட்டோ வில்வேளைச்
சினவும் அனல்விழியாய் சித்திரச பாபதியே 70

துக்கம் பலதரித்த தொக்குடையேன் சொல்லிலக்கம்
பக்கம் பரமுமிலேன் பம்பரம்போ லாவேனோ
அக்கம் பரநதிபா கம்புலிகு டுஞ்சடிலா
திக்கம் பரந்த சித்திரச பாபதியே 71

கனகரச டாக்க கசட கடைத்தலைபோய்
அனகர திபதியென்று ஆர்கலிக்குளாவேனோ
சனகர் சனந்தரர் சனாதரர்க்குத் தானருளும்
தினகரசோ திச்சொருபா சித்திரச பாபதியே 72

உன்னல் மறத்தலுடன் ஊனுறக்க மின்பசுகம்
இன்னபல பெறினுமுனை யான்மறந்திங் குய்வேனோ
கன்னல் மதனைநுதற் கண்ணா லெரித்தோனே
சென்னெல்செறி நன்னகரச் சித்திரச பாபதியே 73

அல்வசமார் நெஞ்ச னகலத் துலக்கிட
இல்வசமாய் நல்வசன மில்லோனெவ் வாறுய்வேன்
சொல்வழியே நின்று தொழுவார்க் கழியாத
செல்வமே நன்னகரச் சித்திரச பாபதியே 74

மீறிக் கருவிகளை விட்டகன்று தட்டுருவி
ஆறிப் பரமசுகத் தன்புற் றழுந்தாதே
மாறிப் புலன்வழிபோய் வாக்குமன முங்கலங்கித்
தேறித் தெளிதலென்றோ சித்திரச பாபதியே 75

ஊமையாய் ஓர்எழுத்தாய் உற்றுணர்ந்தார் கற்றறியா
வாய்மையா லென்னை வசப்படுத்திக் கொண்டாண்டாய்
ஆம்ஐயா நின்பெருமை யாரறிவார் ஆருமிலாத்
திமயா னத்துறையும் சித்திரச பாபதியே 76

உறுவிதியென் றல்லால் உறுகண்வாழ் வுற்றிடினும்
பெறுவிதியென் றெண்ணிமனம் பேதியா நீதியர்க்கு
மறுவிதிதா னுண்டோ மதியுண்டோ வார்த்தையுண்டோ
சிறுவிதியா கந்துடைத்த சித்திரச பாபதியே 77

ஒன்றிரண்டாய் மூன்றா யுளதா யிலதாகி
என்றுமொன்றாய் நின்றவுனை எவ்வா றெடுத்துரைப்பேன்
நின்றிருந்த கற்புமுனி நேரிழைமின் னாரழியச்
சென்றிரந்த கபாலி சித்திரச பாபதியே 78



கனக்குஞ் சரவின் கழியவா ணாள்வறிதாம்
எனக்குஞ் சரணரணிங் கெய்துநாள் எந்நாளோ
வனக்குஞ் சரல்நீ ரருவிசூழ் நன்னகரா
சினக்குஞ் சரமுரித்த சித்திரச பாபதியே 79

தகரக் குழலார்தம் சாயலெனு மாயையினாற்
புகரத்தி யுண்டகனி போலுடைந்து வாடுவனோ
மகரத் தசும்புநறா மாசகல வான்முல்லைச்
சிகரத் தசும்புதொடுஞ் சித்திரச பாபதியே 80

வன்னம் பதங்கலையும் மந்திரமுந் தத்துவமும்
பின்னந் தரும்புவனம் பேதாதி பேதமும்போய்த்
தன்னந் தனியுணருந் தன்மைஎன்றோ தாவுகவி
தென்னங் குரும்பைசிந்துஞ் சித்திரச பாபதியே 81

ஆர்த்த பிறவி அகலப் பகலிரவாய்ப்
பார்த்தவிட மெல்லாம் பரமாகத் தோன்றிடவோர்
வார்த்தையினா லென்னை வசப்படுத்தி மாமுடிமேல்
சேர்த்தபதம் வாங்காதே சித்திரச பாபதியே 82

எய்யா தெடுத்தசென்மம் எத்தனையுண் டத்தனையும்
பொய்யாய்ப் பழங்கதையாய்ப் போனதன்றி யானதுண்டோ
ஐயா கடைக்கண் அருளிஎனை யஞ்சலெனச்
செய்யாயே லுய்வேனோ சித்திரச பாபதியே 83

பொருளார் மனைவியார் புத்திரரார் மித்திரார்
மருளா மிதனைநம்பி வம்பிலே மாய்வேனோ
அருளால் அழுந்தி யகம்புறம்ஒன் றாயுருகித்
தெருளார் தமக்கிருளே சித்திரச பாபதியே 84

கன்மலைய மாயக் கரையாக் கருமலையும்
என்மலைவு தீர எனைத்தாள் கொடுத்தருள்வாய்
பொன்மலைவி லானே பொருவிலா னேபொதியத்
தென்மலையன் பூசைசெய்யுஞ் சித்திரச பாபதியே 85

அலைமாறு போல வலையாதே நின்ற
நிலையாக நில்லென் றெனக்களித்தாய் நீர்மையிலாப்
புலையே னுணராமற் பொய்யேமெய் யாய்நினைந்தேன்
சிலைவேடன் எச்சிலுண்ட சித்திரச பாபதியே 86

ஈண்டும் பிறப்பிறப்பில் எய்தும் இருவினையேன்
யாண்டுஞ் சகடமென மாறா துழல்வேனோ
தாண்டும் புரவிதடந் தடுப்ப வான்முகடு
தீண்டுந் திரிகூடச் சித்திரச பாபதியே 87

பன்றிக்கோ லம்படைத்தோன் காணாத பாதமென
நன்றிக்கோ நாயேற்கு நாடா தெனக்களித்தாய்
அன்றிக்கோ வென்றருண்மார்க் கண்டனுக்காய்க் கண்டிதமாய்த்
தென்றிக்கோ னைக்குமைத்த சித்திரச பாபதியே 88

பெத்தத்து முன்னிலைமை பெற்றிலேன் பித்தேறி
முத்தத்தும் உன்நிலைமை முன்நிலையாக் கண்டதனாற்
சுத்தத்து மாயத் துரிசகற்றிச் சொல்லறுத்தேன்
சித்தத்து ளானவனே சித்திரச பாபதியே 89

மும்மைப் பிறப்பு மொழியொன்றா லேமுனிவோர்
தம்மைப் பரவுந் தரமுமிலேன் சார்புமிலேன்
வெம்மைப் பழவினையை வேரறுப்ப தெந்நாளோ
செம்மைப் பழம்பொருளே சித்திரச பாபதியே 90

கூறுகிலேன் அஞ்செழுத்தைக் கொல்லுகிலேன் வல்வினையை
மாறுகிலேன் ஐம்புலனை மாறாத இன்பசுகத்து
ஆறுகிலேன் அன்பாய் அறிவுமறி யாமையுமாய்த்
தேறுகிலே னுய்வேனோ சித்திரச பாபதியே 91

நம்பற் கரியவிழி நாரியரே தெய்வமெனும்
வம்பர்க் கிதம்பேசி வன்கலியால் வாடுவனோ
உம்பர்க் கிடரொழிய உண்டாய் விடமுமதாய்
செம்பொற் கிரிவளைத்த சித்திரச பாபதியே 92

எல்லார்க்கும் நல்லாய்நீ என்பதெல்லாம் என்னளவும்
பொல்லாப்புச் செய்தாய்வன் புல்லரிடம் போயிரக்கக்
கல்லாக் கொடியனென்றொ காண்பதுனைக் கல்லெனவே
செல்லார்க்குந் தண்டலைசூழ் சித்திரச பாபதியே 93

ஆர்பெரியார் ஆர்சிறியார் ஆர்பகையார் ஆர்உறவார்
பால்பெரிது கொள்வதல்லாற் பாரமென்று தள்ளிடுமோ
நீர்பெருகு வார்சடையாய் நீத்தேநீ தள்ளாதே
சீர்பெருகு குற்றாலச் சித்திரச பாபதியே 94





கன்னியாய் யானுங் கணவனுநீ தான்எனவும்
உன்னியா யுஞ்சுகத்தோ டொன்றெனவின் னூடுருவி
வன்னியாய் நின்று மறையோனுக் கெட்டாத
சென்னியாய் நன்னகரச் சித்திரச பாபதியே 95

எவ்வேளை யுந்துதிக்கும் என்னையமன் வந்தடரின்
அவ்வேளை நீவெளிவந் தஞ்சலென வேதவிர்ப்பாய்
மைவேளை யுண்டகண்ணால் வாய்ந்த திருமலையிற்
செவ்வேளையுந் தருவாய் சித்திரச பாபதியே 96

அம்புளர விந்த மலரிகண்ட வாறதுபோல்
பைம்புளக மீறியுன்னைப் பார்த்துருகி நிற்பதொன்றோ
கம்புளெடுத்தமடங் கற்பதற்றம் நாலிருகாற்
சிம்புள் வடிவெடுத்த சித்திரச பாபதியே 97

மற்றெறும்புன் மோகமத மாச்சரிய லோபமயக்
உற்றெறும்பி உண்டகனி ஒத்தே னிகழுமிலேன்
பற்றறுமப் ரோதயத்தாற் பற்றும் இருதலைத்தீச்
சிற்றெறும்பு போலானேன் சித்திரச பாபதியே 98

குலம்பொய் நலம்பொய் குணம்பொய் கலிகடல்வாய்க்
கலம்போ லதிற்சுழலும் காகம்போ லாகிநின்றேன்
மலம்போ விடும்பாசம் மாமறலி மார்புதைத்துச்
சிலம்போ விடுசரணச் சித்திரச பாபதியே 99

பெற்றார் பிறந்தார் பிறவித் துணைமனைவி
உற்றார்சுற் றெல்லாம் உடன்இருந்து முன்போல
சற்றார் உதவிசெய்வார் தாயுநீ தந்தையுநீ
செற்றார் புரஞ்செகுத்த சித்திரச பாபதியே 100

### வாழ்த்து

விண்டரங்க னுங்கமல வேதியனும் போற்றிசெயும்
பண்டரங்கன் சித்திரசபா பதிமாலை வாழ்த்த வல்லார்
அண்டரங்கம் பூண்டுவிண்ணா டாண்டருளி லேயமுந்தி
தண்டரங்க வேணியன்போல் சாரூப மெய்துவரே

சித்திரசபாபதி மாலை முற்றும்